புன்மாலை யிரவெல்லாம் புலர்ந்தது ஞானப் பொருப்பின்மேற் பொற்கதிர் பொலிந்தது புலவோர், சொன்மாலை தொடுத்தனர் துதித்துநிற் கின்றார் சுத்தசன் மார்க்கசங் கத்தவ ரெல்லாம், மன்மாலை மாலையா வந்துசூழ் கின்றார் வானவர் நெருங்கினர் வாழியென் கின்றார், என்மாலை யணிந்தவென் னருட்பெருஞ் சோதி யென்பதி யே பள்ளி யெழுந்தருள் வாயே. (ரு)

ஒருமையி னுலகெலா மோங்குக வெனவே யூதின சின்னங்க ளூதின சங்கம், பெருமைகொள் சமரச சுத்தசன் மார்க்கப் பெரும்புகழ் பேசினர் பெரியவர் சூழ்ந்தா, ரருமையு மெளிமையு மாகியன் றாகி யம்பலத் தேசித்தி யாடல்செய் பதியே, யிருமையு மளித்தவென் னருட்பெருஞ் சோதி யென்னர சேபள்ளி யெழுந்தருள் வாயே. (சு)

சினைப்பள்ளித் தாமங்கள் கொணர்ந்தன ரடியார் சிவசிவ போற்றியென் றுவகைகொள் கின்றார், நினைப்பள்ளி யுண்ணத்தெள் ளாரமு தளிக்கும் நேரமிந் நேரமென் றுரியர் புகன்றார், முனைப்பள்ளி பயிற்றுதென் றனைக்கல்வி பயிற்றி முழுதுணர் வித்துடற் பழுதெலாந் தவிர்த்தே, யெனைப்பள்ளி யெழுப்பிய வருட்பெருஞ் சோதி யென்னப்ப னேபள்ளி யெழுந்தருள் வாயே. (எ)

மதம்பிடித் தவரெல்லாம் வாய்பிடிப் புண்டு வந்துநிற் கின்றனர் வாய்திறப் பிப்பான், கதம்பிடித் தவரெல்லாங் கடும்பிணி யாலே கலங்கினர் சூழ்ந்தன ருலம்புறு கின்றார், பதம்பிடித் தவரெல்லா மம்பலப் பாட்டே பாடின ராடினர் பரவிநிற் கின்றா, ரிதம்பிடித் தெனையாண்ட வருட்பெருஞ் சோதி யென்னைய னேபள்ளி யெழுந்தருள் வாயே. (அ)

மருளொடு மாயைபோய்த் தொலைந்தது மதங்கள் வாய்மூடிக் கொண்டன மலர்ந்தது கமலம், அருளொளி விளங்கிய தொருதிருச் சபையு மலங்கரிக் கின்றனர் துலங்கிவீற் றிருக்கத், தெருளொடு பொ

ருளுமேன் மேலெனக் களித்துச் சித்தெலாஞ் செய்திடத் திருவருள் புரிந்தே, யிருளறுத் தெனையாண்ட வருட்பெருஞ் சோதி யென்வ ள்ள லேபள்ளி யெழுந்தருள் வாயே. (௯)

அலங்கரிக் கின்றேமோர் திருச்சபை யதிலே யமர்ந்தருட் சோதி கொண் டடிச்சிறி யோமை, வலம்பெறு மிறவாத வாழ்வில்வைத் திடவே வாழ்த்துகின் றேமுன்னர் வணங்கிநிற் கின்றேம், விலங்கிய திருளெலாம் விடிந்தது பொழுது விரைந்தெமக் கருளுதல் வேண்டு மித் தருண, மிலங்குநற் றருணமெம் மருட்பெருஞ் சோதி யெந்தங் தை யேபள்ளி யெழுந்தருள் வாயே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## திருவுந்தியார்.

### கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

இரவு விடிந்த திணையடி வாய்த்தன
பரவி மகிழ்ந்தேனென் றுந்தீபற
பாலமு துண்டேனென் றுந்தீபற. (௧)

பொழுது விடிந்தது பொற்பதம் வாய்த்தன
தொழுது மகிழ்ந்தேனென் றுந்தீபற
தூயவ னானேனென் றுந்தீபற. (௨)

தூக்கந் தொலைந்தது சூரியன் றேன்றின
னேக்கந் தவிர்ந்தேனென் றுந்தீபற
வின்னமு துண்டேனென் றுந்தீபற. (௩)

துன்பந் தவிர்ந்தது தூக்கந் தொலைந்தது
இன்பங் கிடைத்ததென் றுந்தீபற
வெண்ணம் பலித்ததென் றுந்தீபற. (௪)

ஞான முதித்தது நாத மொலித்தது
தீனந் தவிர்ந்ததென் றுந்தீபற
சிற்சபை கண்டேனென் றுந்தீபற. (ரு)

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரையொளி யோங்கிற்றென் றுந்தீபற
பலித்தது பூசையென் றுந்தீபற. (சா)

உள்ளிரு ணீங்கிற்றென் னுள்ளொளி யோங்கிற்றுத்
தெள்ளமு துண்டேனென் றுந்தீபற
தித்திக்க வுண்டேனென் றுந்தீபற. (எ)

எந்தையைக் கண்டே னிடரெலா நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேனென் றுந்தீபற
சித்திகள் பெற்றேனென் றுந்தீபற. (அ)

தந்தையைக் கண்டேனான் சாகா வரம்பெற்றேன்
சிந்தை களித்தேனென் றுந்தீபற
சித்தெலாம் வல்லேனென் றுந்தீபற. (கூ)

முத்தியைப் பெற்றேனம் முத்தியி னுல்ஞான
சித்தியை யுற்றேனென் றுந்தீபற
சித்தனு மானேனென் றுந்தீபற. (க0)

---

திருச்சிற்றம்பலம்.

## சண்முகர் காலேப்பாட்டு.

திருச்சிற்றம்பலம்.

வாரும்வாருந் தெய்வ வடிவேல் முருகரோ
வள்ளி மணாளரே வாரும் - புள்ளிமயி லோரோ வாரும். (க)

சங்க மொலித்தது தாழ்கடல் விம்மிற்றுச்
சண்முக நாதரோ வாரும் - உண்மை விநோதரோ வாரும். (உ)

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்றுப்
பொன்னன வேலரோ வாரும் - மின்னார்முந் நூலரோ வாரும். (௩)

தூகங் கனைந்தது காலையு மாயிற்றுக்
கண்ணுதல் சேயரோ வாரும் - ஒண்ணுதல் நேயரோ வாரும். (௪)

செங்கதிர் தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரோ வாரும் - எங்குரு நாதரோ வாரும். (௫)

அருண னுதித்தன னன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமுகத் தோரோ வாரும் - மாறிலகத் தோரோ வாரும். (௬)

சூரியன் றோன்றினன் றொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரோ வாரும் - வீரசிங் காரரே வாரும். (௭)

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயு தத்தோரோ வாரும் - காலாயு தத்தோரோ வாரும். (௮)

சேவ லொலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரோ வாரும் - மூவர் முதல்வரோ வாரும். (௯)

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்
பன்னிரு தோளரோ வாரும் - பொன்மலர்த் தாளரோ வாரும். (௧0)

மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரோ வாரும் - தீமையில் தீரரோ வாரும். (௧௧)

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரோ வாரும் - வைப்பி னணியரோ வாரும். (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

# ஸ்ரீராமநாமத் திருப்பதிகம்.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

காராய வண்ண மணிவண்ண கண்ண கனசங்கு சக்ர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய சீராம ராம னெனவே
தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க தாமோத ராய நமவோம்
நாராய ணாய நமவாம ணாய நமகேச வாய நமவே.

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமகளெம் பெருமாட்டி மகிழும் வண்ணச்
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்
தநுவெடுத்த வொருமுதலே தருமப் பேறே
இருமையுமென் னுளத்தமர்ந்த ராம நாமத்
தென்னரசே யென்னமுதே யென்று யேநின்
மருமலர்ப்பொன் னடிவழுத்துஞ் சிறியே னந்தோ
மனந்தளர்ந்தே னறிந்துமருள் வழங்கி னாயே. (க)

கலைக்கடலே கருணைநெடுங் கடலே கானங்
கடந்ததடங் கடலேயென் கருத்தே ஞான
மலைக்கணெழுஞ் சுடரேவான் சுடரே யன்பர்
மனத்தொளிருஞ் சுயஞ்சுடரே மணியே வானோர்
தலைக்கணுறு மகுடசிகா மணியே வாய்மைத்
தசரதன்றன் குலமணியே தமியே னுள்ள
நிலைக்கணுறுஞ் சீராம வள்ள லேயென்
னிலையறிந்து மருளவின்னு நினைந்தி லாயே. (உ)

மண்ணுளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்
மற்றவர்போற் பற்றடைந்து மாள வேண்டேன்
விண்ணுளா நின்றவொரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் றிருவருளே வேண்டி நின்றேன்
புண்ணுளா நின்றமன முடையேன் செய்த
பொய்யனைத்துந் திருவுளத்தே பொறுப்பா யன்றிக்
கண்ணுளா சுடர்க்கமலக் கண்ண வென்னைக்
கைவிடிலென் செய்வேனே கடைய னேனே. (க)

தெவ்வினையா ரரக்கர்குலஞ்செற்ற வெற்றிச்
சிங்கமே யெங்கள்குல தெய்வ மேயோ
வெவ்வினைதீர்த் தருள்கின்ற ராம நாம
வியன்சுடரே யிவ்வுலக விடயக் காட்டில்
இவ்வினையே னகப்பட்டேன் புலனுங் கள்வர்க்
கிலக்கானேன் றுணையொன்று மில்லே னந்தோ
செய்வினையொன் றறியேனிங் கென்னை யெந்தாய்
திருவுளத்திற் சேர்த்திலையேற் செய்வ தென்னே. (உ)

வான்வண்ணக் கருமுகிலே மழையே நீல
மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்
தேன்வண்ணச் செழுஞ்சுவையே ராம நாமத்
தெய்வமே நின்புகழைத் தெளிந்தே யோதா
ஊன்வண்ணப் புலைவாயா ரிடத்தே சென்றுங்
குழைக்கின்றேன் செய்வகையொன் றுணரே னந்தோ
கான்வண்ணக் குடும்பத்திற் கிலக்கா வென்னைக்
காட்டினையே யென்னேநின் கருணை யீதோ. (ங)

பொன்னுடையார் வாயிலிற்போய் வீணே காலம்
போக்குகின்றே னிவ்வுலகப் புணர்ப்பை வேண்டி
என்னுடையாய் நின்னடியை மறந்தே னந்தோ
வென்செய்கே னென்செய்கே னேழை யேனுன்

பின்னுடையேன் பிழையுடையே னல்லா லுன்றன்
பேரருளு முடையேனே பிறந்தேன் வாளா
உன்னுடைய திருவுளத்தென் னினைதி யோவென்
னெருமுதல்வா சீராமா வுணர்கி லேனே. (சு)

அறம்பழுக்குந் தருவேயென் குருவே யென்ற
ன்ருயிருக் கொருதுணையே யரசே பூவை
நிறம்பழுக்க வழகொழுகும் வடிவக் குன்றே
நெடுங்கடலுக் கணையளித்த நிலையே வெய்ய
மறம்பழுக்கு மிலங்கையிரா வணனைப் பண்டோர்
வாளியினுற் பணிகொண்ட மணியே வாய்மைத்
திறம்பழுக்குஞ் சீராம வள்ள லேநின்
திருவருளே யன்றிமற்றோர் செயலி லேனே. (எ)

கல்லாய வன்மனத்தார் தம்பாற் சென்றே
கண்கலக்கங் கொள்கின்றேன் கவலை வாழ்வை
எல்லாமுள் ளிருந்தறிந்தா யன்றோ சற்று
மிரங்கிலையெம் பெருமானே யென்னே யென்னே
பொல்லாத வெவ்வினையே னெனினு மென்னைப்
புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி யன்றோ
அல்லார்ந்த துயர்க்கடலின் றெடுத்தி டாயே
லாற்றேனுன் பழிநின்பா லாக்கு வேனே. (அ)

மையான நெஞ்சகத்தோர் வாயில் சார்ந்தே
மனந்தளர்ந்தேன் வருந்துகின்ற வருத்த மெல்லாம்
ஐயாவென் னுளத்தமர்ந்தாய் நீதான் சற்று
மறியாயோ வறியாயே லறிவா ரியாரோ
பொய்யான தன்மையினே னெனினு மென்னைப்
புறம்விடுத்த லழகேயோ பொருளா வெண்ணி
மெய்யாவென் றனையந்நா ளாண்டா யிந்நாள்
வெறுத்தனையே லெங்கேயான் மேவு வேனே. (கூ)

கூறுவதோர் குணமில்லாக் கொடிதாஞ் செல்வக்
குருட்டறிவோ ரிடைப்படுமென் குறைக ளெல்லாம்
ஆறுவதோர் வழிகாணே னந்தோ வந்தோ
வவலமெனுங் கருங்கடலி லழுந்து கின்றேன்
ஏறுவதோர் வகையறியே னெந்தா யெந்தா
யேற்றுகின்றோர் நின்னையன்றி யில்லே னென்னைச்
சீறுவதோ விரங்குவதோ யாதோ வுன்றன்
றிருவுளத்தைத் தெரியேனே சிறிய னேனே. (௯௦)

திருச்சிற்றம்பலம்.

## திருவெவ்வுளூர் வீராகவப் பெருமாள்

# போற்றித் திருப்பஞ்சகம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தண்ணமர் மதியே சாந்தந் தழைத்தசத் துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே யெவ்வு ளூரி லமர்ந்தரு ளாதி போற்றி
விண்ணவர் முதல்வா போற்றி வீரரா கவனே போற்றி. (௧)

பாண்டவர் தூத னாகப் பலித்தருள் பரனே போற்றி
நீண்டவ னென்ன வேத நிகழ்த்துமா நிதியே போற்றி
தூண்டலில் லாம லோங்குஞ் சோதிநல் விளக்கே போற்றி
வேண்டவ ரெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. (௨)

மேதினி புரக்கும் வேந்தர் வீறெலா நினதே போற்றி
கோதிலா மனத்தே நின்று குலாவிய கோவே போற்றி
ஓதிய வெவ்வு ளூரி லுறைந்தருள் புரிவாய் போற்றி
வேதியன் றன்னை யீன்ற வீரரா கவனே போற்றி. (௩)

இளங்கொடி தனைக்கொண் டேகு மிராவணன் றனையழித்தே
களங்கமில் விபீட ணர்க்குக் கனவர சளித்தாய் போற்றி
துளங்குமா தவத்தோ ருற்ற துயரெலாந் தவிர்த்தாய் போற்றி
விளங்குநல் லெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. (௪)

அற்புதத் திருவை மார்பி லணைத்தபே ரழகா போற்றி
பொற்புறு திகிரி சங்கு பொருந்துகைப் புனிதா போற்றி
வற்புறு பிணிதீர்த் தென்னை மகிழ்வித்த வரதா போற்றி
வெற்புய ரெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. (௫)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கண்ணமங்கை இலக்குமிதோத்திரம்.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உலகம் புரக்கும் பெருமான்ற னுளத்தும் புயத்து மமர்ந்தருளி
யுவகை யளிக்கும் பேரின்ப வுருவே யெல்லா முடையாளே
திலகஞ் செறிவா ணுதற்கரும்பே தேனே கனிந்த செழுங் கனியே
தெவிட்டா தன்ப ருளத்துள்ளே தித்தித் தெழுமோர் தெள்ளமுதே
மலகஞ் சுகத்தேற் கருளளித்த வாழ்வே யென்கண் மணியேயென்
வருத்தந் தவிர்க்க வருங்குருவாம் வடிவே ஞான மணிவிளக்கே
சலகந் தரம்போற் கருணைபொழி தடங்கட் டிருவே கணமங்கைத்
தாயே சரணஞ் சரணமிது தருணங் கருணை தருவாயே. (௧)

திருச்சிற்றம்பலம்.

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பிச்சுலகர் மெச்சப் பிதற்றநின்ற பேதையனேன்
இச்சையெலா மெய்த விசைந்தருளிச் செய்தனையே
அச்சமெலாந் தீர்ந்தே னருளமுத முண்கின்றேன்
நிச்சலும்பே ரானந்த நித்திரைசெய் கின்றேனே. (௧)

திருச்சிற்றம்பலம்.

## பாங்கியர்க்கறிவுறுத்தல்.

### கண்ணிகள்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலத்தி லாடுகின்றார் பாங்கிமாரே - அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே (க)

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே - மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே (உ)

இன்பவடி வாய்ச்சபையிற் பாங்கிமாரே - நட
மிட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமாரே (ங)

ஈநவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே - நட
நேசர்தமை யெய்தும்வண்ணம் பாங்கிமாரே (ச)

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமாரே - யின்ப
வுருவாகி யோங்குகின்றார் பாங்கிமாரே (ரு)

ஊனவுல கைக்கருதேன் பாங்கிமாரே - மன்றில்
உத்தமருக் குறவாவேன் பாங்கிமாரே (சு)

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமாரே - யென்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே (எ)

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமாரே - மூன்று
கண்ணுடையா ரென்பாரையோ பாங்கிமாரே (அ)

கன்மனமெல் லாங்கரைப்பார் பாங்கிமாரே - மனங்
கரையாரொன் னளவிலே பாங்கிமாரே (கூ)

கள்ளமொன்று மறியேனான் பாங்கிமாரே - என்னைக்
கைவிடவுந் துணிவாரோ பாங்கிமாரே (க0)

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமாரே - இன்று
கைநழுவ விடுவாரோ பாங்கிமாரே (கக)

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமாரே - அது
கூடும்வண்ணங் கூட்டிடுவீர் பாங்கிமாரே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

# வெண்ணிலா.

திருச்சிற்றம்பலம்.

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே - ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே (௧)

நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே - அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே (௨)

சச்சிதானந் தக்கடலில் வெண்ணிலாவே - நானுந்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலாவே (௩)

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலாவே - நானும்
இருக்கவெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே (௪)

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலாவே - நானுஞ்
சிவமயம தாய்விழைந்தேன் வெண்ணிலாவே (௫)

போதநடு வூடிருந்த வெண்ணிலாவே - மலப்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலாவே (௬)

ஆருமறி யாமலிங்கே வெண்ணிலாவே - அரு
ளாளர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே (௭)

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே - யெங்க
ளையர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே (௮)

வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே - மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலாவே (௯)

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே - அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே (௧0)

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலாவே - அந்த
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலாவே (௧௧)

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே - நீதான்
விளைந்தவண்ண மதுசொல்லாய் வெண்ணிலாவே (கஉ)

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே - அந்த
மூன்றுமொன்ருய் முடிந்ததென்ன வெண்ணிலாவே (கங)

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலாவே - ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே (கச)

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலாவே - என்னை
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே (கரு)

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே - அந்த
வாசியென்னப் பேசுகண்டாய் வெண்ணிலாவே (கசா)

ஐந்தலைப்பாம் பாட்டுகின்ருர் வெண்ணிலாவே - அவர்
அம்பலத்தி னின்றதென்ன வெண்ணிலாவே (கஎ)

ஓமெழுத்தி லைந்துண்டென்பார் வெண்ணிலாவே - அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே (கஅ)

அம்பலத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே - அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே (கக)

அந்தரத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே - அவர்
ஆடும்வகை யெப்படியோ வெண்ணிலாவே (உO)

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே - எங்கு
மாகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே (உக)

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலாவே - ஐயர்
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலாவே (உஉ)

அம்பரத்தி லாடுகின்ருர் வெண்ணிலாவே - என்னை
ஆட்டுகின்ரு ரிம்பரத்தே வெண்ணிலாவே. (உங)

---

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# நாமாவளி.



திருச்சிற்றம்பலம்.

அம்பலத்தரசே யருமருந்தே
யானந்தத்தேனே யருள்விருந்தே. (க)

பொதுநடத்தரசே புண்ணியனே
புலவரெலாம்புகழ் கண்ணியனே. (உ)

சிவசிவசிவசிவ சின்மயதேஜா
சிவசுந்தரகுஞ் சிதநடராஜா. (௩)

மலைதருமகளே மடமயிலே
மதிமுகவமுதே யிளங்குயிலே. (௪)

ஆனந்தக்கொடியே யிளம்பிடியே
யற்புதத்தேனே மலைமானே. (௫)

நடனவிவேக பரம்பரவேதா
நடனசபேச சிதம்பரநாதா. (௬)

அரிபிரமாதியர் தேடியநாதா
அரகரசிவசிவ ஆடியபாதா. (௭)

அந்தணவங்கண வம்பரபோகா
அம்பலநம்பர வம்பிகைபாகா. (௮)

அம்பரவிம்ப சிதம்பரநாதா
அஞ்சிதரஞ்சித குஞ்சிதபாதா. (௯)

தந்திரமந்திர யந்திரபாதா
சங்கரசங்கர சங்கரநாதா. (க0)

கருணாநிதியே சபாபதியே
கதிமாநிதியே பசுபதியே. (கக)

சபாபதிபாதம் தபோபிரசாதம்
தயாநிதிபோதம் சதோதயவேதம். (கஉ)

கனகசிதம்பர கங்கரபுரஹர
அனகபரம்பர சங்கரஹரஹர. (கஈ)

சகலகலாண்ட சராசரகாரண
சகுணசிவாண்ட பராபரபூரண. (கச)

சிதம்ப்ரகாசா பரம்பிரகாசா
சிதம்பரேசா சுயம்பிரகாசா. (கரு)

இக்கரைகடந்திடி லக்கரையே
இருப்பதுசிதம்பர சர்க்கரையே. (கசு)

என்னுயிருடம்பொடு சித்தமதே
இனிப்பதுநடராச புத்தமுதே. (கஎ)

ஐயர்திருச்சபை யாடகமே
ஆடுதலானந்த நாடகமே. (கஅ)

கனகசபாபதி பசுபதிநவபதி
அனகவுமாபதி யதிபதிசிவபதி. (ககூ)

உத்தரஞான சிதம்பரமே
சித்தியெலாந்தரு மம்பரமே. (உO)

அம்பலவாசிவ மாதேவா
வம்பலவாவிங்கு வாவாவா. (உக)

நடராசனெல்லார்க்கு நல்லவனே
நல்லவெலாஞ்செய வல்லவனே. (உஉ)

ஆனந்தநாடகங் கண்டோமேபர
மானந்தபோனகங் கொண்டோமே. (உஈ)

சகளவுபகள நிட்களநாதா
உகளசததள மங்களபாதா. (உச)

சந்ததமுஞ்சிவ சங்கரபஜனம்
சங்கிதமென்பது சற்சனவசனம். (உரு)

சங்கரசிவசிவ மாதேவா
எங்களையாட்கொள வாவாவா. (உசு)

அரகரசிவசிவ மாதேவா
அருளமுதந்தர வாவாவா. (உஎ)

நடனசிகாமணி நவமணியே
திடனகமாமணி சிவமணியே. (உஅ)

நடமிடுமம்பல நன்மணியே
புடமிடுசெம்பல பொன்மணியே. (உகூ)

உவட்டாதுசித்திக்கு முள்ளமுதே
தெவிட்டாதுதித்திக்குந் தெள்ளமுதே. (௩0)

நடராசவள்ளலை நாடுதலே
நந்தொழிலாம்விளை யாடுதலே. (௩௧)

அருட்பொதுநடமிடு தாண்டவனே
யருட்பெருஞ்சோதியென் னுண்டவனே. (௩௨)

நடுநாடிநடுநாடி நடமாடுபதியே
நடராஜநடராஜ நடராஜநிதியே. (௩௩)

நடுநாடியொடுகூடி நடமாடுமுருவே
நடராஜநடராஜ நடராஜகுருவே. (௩௪)

நடுநாடியிடைநாடி நடமாடுநலமே
நடராஜநடராஜ நடராஜபலமே. (௩௫)

நடராசமாணிக்க மொன்றதுவே
நண்ணுதலாணிப்பொன் மன்றதுவே. (௩௬)

நடராசபலமது நம்பலமே
நடமாடுவதுதிரு வம்பலமே. (௩௭)

சபாசிவாமஹாசிவா சகாசிவாசிகாசிவா
சதாசிவாசதாசிவா சதாசிவாசதாசிவா. (௩அ)

வாசிவாசதாசிவா மஹாசிவாதயாசிவா
வாசிவாசிவாசிவா சிவாசிவாசிவாசிவா. (௩௯)

நான்சொன்னபாடலுங் கேட்டாரோ
ஞானசிதம்பர நாட்டாரோ. (௪0)

நீயென்னப்பனல்லவா நினக்குமின்னுஞ்சொல்லவா
தாயின்மிக்கநல்லவா சர்வசித்திவல்லவா. (௪௧)

ஞானசித்திபுரத்தனே நாதசத்திபரத்தனே
வானமொத்ததரத்தனே வாதவித்தைவரத்தனே. (௪௨)

ஆதிநீதிவேதனே யாடனீடபோதனே
வாதிஞானபோதனே வாழ்கவாழ்கநாதனே. (௪௩)

இனித்துயர்படமாட்டேன் விட்டேனே
யென்குருமேலாணை யிட்டேனே. (௪௪)

இனிப்பாடுபடமாட்டேன் விட்டேனே
யென்னப்பன்மேலாணை யிட்டேனே. (௪௫)

சன்மார்க்கம்நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கந் துன்மார்க்கந் துன்மார்க்கம். (௪௬)

நடராஜர்பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார்பாட்டெல்லாம் வெறும்பாட்டு. (௪எ)

சிதம்பரப்பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள்பாட்டெல்லாந் தெருப்பாட்டு. (௪அ)

அம்பலப்பாட்டே யருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு. (௪௯)

நாதபரம்பரனேபர நாதசிதம்பரனே
நாதநிகம்பரனேதச நாதசுதந்தரனே. (௫0)

ஞானநடத்தவனேபர ஞானியிடத்தவனே
ஞானவரத்தவனேசிவ ஞானபுரத்தவனே. (ருக)

ஞானசபாபதியேமறை நாடுசேதாகதியே
தீனதயாநிதியேபர தேவியுமாபதியே. (ருஉ)

அம்பலவாணனை நாடினனே
அவனடியாரொடு கூடினனே. (ருங)

தம்பதமாம்புகழ் பாடினனே
தந்தனவென்றுகூத் தாடினனே. (ருச)

நாதாந்தநாட்டுக்கு நாயகரோ
நடராஜரோசபா நாயகரோ. (ருரு)

நான்சொல்லுமிதுகேளீர் சத்தியமே
நடராஜவெனில்வரும் நித்தியமே. (ருசு)

நல்லோரொல்லார்க்குஞ் சபாபதியே
நல்வரமீயுந் தயாநிதியே. (ருஎ)

நடராஜர்தன்னட நன்னடமே
நடம்புரிகின்றது மென்னிடமே. (ருஅ)

சிவகாமவல்லிக்கு மாப்பிள்ளையே
திருவாளனவன் சீர்ப்பிள்ளையே. (ருகூ)

சிவகாமவல்லியைச் சேர்ந்தவனே
சித்தெல்லாஞ்செய்திடத் தேர்ந்தவனே. (சுO)

இறவாவரந்தரு நற்சபையே
யெனமறைபுகழ்வது சிற்சபையே. (சுக)

என்னிருகண்ணு ளிருந்தவனே
இறவாதருளு மருந்தவனே. (சுஉ)

அம்பலவாணர்தம் மடியவரோ
யருளரசாள்மணி முடியவரோ. (சுங)

---

திருச்சிற்றம்பலம்.

## ஞானசங்கூதுதல்.

இராகம் - சஹானு - அடதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

ஊதூதுசங்கே யூதூதுசங்கே - யூதூதுசங்கே யூதூதுசங்கே.

சரணங்கள்.

கைவிட மாட்டானென் றூதூது சங்கே
கனக சபையானென் றூதூது சங்கே
பொய்விடச் செய்தானென் றூதூது சங்கே
பூசை பலித்ததென் றூதூது சங்கே. (க)

பொன்னடி தந்தானென் றூதூது சங்கே
பொன்னம் பலத்தானென் றூதூது சங்கே
யின்ன லறுத்தானென் றூதூது சங்கே
யென்னுள் ளமர்ந்தானென் றூதூது சங்கே. (உ)

தூக்கந் தொலைத்தானென் றூதூது சங்கே
துன்பந் தவிர்த்தானென் றூதூது சங்கே
யேக்கங் கெடுத்தானென் றூதூது சங்கே
யேம சபையானென் றூதூது சங்கே. (ங)

சிவமாக்கிக் கொண்டானென் றூதூது சங்கே
சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே
நவநோக் களித்தானென் றூதூது சங்கே
நானவ னானேனென் றூதூது சங்கே. (ச)

பொய்விட் டகன்றேனென் றூதூது சங்கே
புண்ணிய னானேனென் றூதூது சங்கே
மெய்தொட்டு நின்றேனென் றூதூது சங்கே
மேல்வெளி கண்டேனென் றூதூது சங்கே. (ரு)

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்தமேலீடு.

இராகம் - அடாணா, ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

கையறவி லாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் துண்டுநடு நாட்டு
ஐயர்மிக வுய்யும்வகை யப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு. (க)

சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு
தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு
இச்சமய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
என்பிறப்புத் துன்பமெலா மின்றோடே போச்சு. (உ)

ஈசனரு ளாற்கடலி லேற்றதொரு வோடம்
ஏறிக்கரை யேறினே னிருந்ததொரு மாடம்
தேசுறுமம் மாடநடுத் தெய்வமணிப் பீடம்
தீபவொளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம். (ங)

தூரியமலை மேலுளதோர் சோதிவள நாடு
தோன்றுமதி லேயர்நடஞ் செய்யுமணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயி ரோடு
செத்தவரெ ழுவாரென்று கைத்தாளம் போடு. (ச)

வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு
வலதுபுச மாடநம்பால் வந்ததருள் வாழ்வு
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு. (ரு)

அம்பலத்தி லெங்களைய ராடியநல் லாட்டம்
அன்பொடு துதித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம். (சா)

நாத்திகஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவதும் நாறியபிண் ணாக்கு

சீர்த்திபெறு மம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. (எ)
அருட்பெருஞ் சோதியைக் கண்டேனே
ஆனந்தத் தெள்ளமு துண்டேனே
இருட்பெரு மாயையை விண்டேனே
எல்லாஞ்செய் சித்தியைக் கொண்டேனே. (அ)

திருச்சிற்றம்பலம்.

## சின்னம்பிடித்தல்.

இராகம் - அடாணு, ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவர் வந்தாரென்று சின்னம்பிடி
யற்புதஞ்செய் கின்றாரென்று சின்னம்பிடி
செம்பல னளித்தாரென்று சின்னம்பிடி
சித்திநிலை பெற்றதென்று சின்னம்பிடி. (க)

சிற்சபையைக் கண்டோமென்று சின்னம்பிடி
சித்திகள்செய் கின்றோமென்று சின்னம்பிடி
பொற்சபை புகுந்தோமென்று சின்னம்பிடி
புந்திமகிழ் கின்றோமென்று சின்னம்பிடி. (உ)

ஞானசித்தி புரமென்று சின்னம்பிடி
நாடகஞ்செய் யிடமென்று சின்னம்பிடி
ஆனசித்தி செய்வோமென்று சின்னம்பிடி
யருட்சோதி பெற்றோமென்று சின்னம்பிடி. (ங)

கொடிகட்டிக் கொண்டோமென்று சின்னம்பிடி
கூத்தாடு கின்றோமென்று சின்னம்பிடி
அடிமுடியைக் கண்டோமென்று சின்னம்பிடி
யருளமுத முண்டோமென்று சின்னம்பிடி. (ச)

அப்பர்வரு கின்றாரென்று சின்னம்பிடி
யற்புதஞ்செய் வதற்கென்று சின்னம்பிடி
செப்பநிலை பெற்றதென்று சின்னம்பிடி
சித்திபுர மிடமென்று சின்னம்பிடி. (ரு)

தானேகா ஞனேனென்று சின்னம்பிடி
சத்தியஞ்சத் தியமென்று சின்னம்பிடி
ஊனே புகுந்ததென்று சின்னம்பிடி
யொளிவண்ண மானதென்று சின்னம்பிடி. (௬)

வேகாத காலுணர்ந்து சின்னம்பிடி
வேகா நடுத்தெரிந்து சின்னம்பிடி
சாகாத் தலையறிந்து சின்னம்பிடி
சாகாத கல்விகற்றுச் சின்னம்பிடி. (௭)

மீதான நிலையேறிச் சின்னம்பிடி
வெட்டவெளி நடுநின்று சின்னம்பிடி
வேதாக மங்கடந்து சின்னம்பிடி
வேதாந்த சித்தாந்த சின்னம்பிடி. (௮)

பன்மார்க்க முங்கடந்து சின்னம்பிடி
பன்னிரண்டின் மீதுநின்று சின்னம்பிடி
சன்மார்க்க மார்க்கமென்று சின்னம்பிடி
சத்தியஞ்செய் கின்றேமென்று சின்னம்பிடி. (௯)

செத்தாடு கின்றோனென்று சின்னம்பிடி
செத்தா ரெழுவாரென்று சின்னம்பிடி
இத்தா ரணியிலென்று சின்னம்பிடி
யிதுவே தருணமென்று சின்னம்பிடி. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## பிரபஞ்சவெற்றி.

திருச்சிற்றம்பலம்.

அருட்சோதி யானேனென் றறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேனென் றறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேனென் றறையப்பா முரசு
மரணந் தவிர்ந்தேனென் றறையப்பா முரசு. (௧)

திருச்சிற்றம்பலம்.



திருஞானசம்பந்தர். திருநாவுக்கரசு. சுந்தரமூர்த்தி. மாணிக்கவாசகர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவசமயாசாரியர் துதி.

## * ஆளுடையபிள்ளையாரருண்மாலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

† உலகிய லுணர்வோ ரணுத்துணை யேனு முற்றிலாச் சிறிய வோர் பருவத், திலகிய வெனக்குள் ளிருந்தரு ணெறியி லேற்றவுந் தரமிலா மையினுன், விலகுறுங் காலத் தடிக்கடி யேற விடுத்துப் பின் விலகுறு வண்ணம், அலகிலா வுணர்ச்சி யளித்தனை யுன்ற னருட்கடற் பெருமையென் புகல்வேன், திலகநற் காழி ஞானசம் பந்தத் தெள்ளமு தாஞ்சிவ குருவே. (க)

உயிரநு பவமுற் றிடலத னிடத்தே யோங்கரு ளநுபவ முறமச், செயிரினல் லநுப வத்திலே சுத்த சிவவநு பவமுற மென்றாய், பயிலுமூ வாண்டிற் சிவைதரு ஞானப் பான்மகிழ்ந் துண்டுமெய்ந் நெறியாம், பயிர்தழைத் தறவைத் தருளிய ஞான பந்தனென் றோங்கு சற் குருவே. (உ)

தத்துவ நிலைக டனித்தனி யேறித் தனிப்பர நாதமாந் தலத்தே, யொத்ததன் மயமா நின்னைநீ யின்றி யுற்றிட லுயிரநு பவமென், றித்துணை வெளியி னென்னையென் னிடத்தே யிருந்தவா றளித்தனை யன்றோ, சித்தநற் காழி ஞானசம் பந்தச் செல்வமே யெனதுசற் குருவே. (ங)

---

* திருஞானசம்பந்தசுவாமிகள்.

† திருவருட்பிரகாசவள்ளலார் திருக்கரத்தாலெழுதிய மூலப் பிரதியில் இத்திருவிருத்தம் ஐந்தடியாகவே யிருந்ததென் றறிக.

தனிப்பர நாத வெளியின்மே னினது தன்மயந் தன்மய மாக்கிப்; பனிப்பிலா தென்று முள்ளதாய் விளங்கிப் பரம்பரத் துட்புற மாகி, யினிப்புற வொன்று மியம்புரு வியல்பா யிருந்ததே யருளநுபவமென், றெனக்கருள் புரிந்தாய் ஞாநசம் பந்த னென்னுமென் சற்குரு மணியே. (௪)

உள்ளதாய் விளங்கு மொருபெரு வெளிமே லுள்ளதாய் முற்று முள் ளதுவாய், நள்ளதா யெனதாய் நானதாய்த் தனதாய் நவிற்றருந் தானதா யின்ன, விள்ளொணு வப்பா லப்படிக் கப்பால் வெறுவெளி சிவவநு பவமென், றுள்ளுற வளித்த ஞாநசம் பந்த வுத்தம சுத்த சற் குருவே. (௫)

பொத்திய மூல மலப்பிணி தவிர்க்கும் பொருளரு ளநுபவ மதற்குப், பத்திய முயிரி னநுபவ மிதனைப் பற்றறப் பற்றுதி யிதுவே, சத்திய மெனவென் றனக்கருள் புரிந்த தனிப்பெருங் கருணையென் புகல்வேன்; முத்தியற் சிவிகை யிவர்ந்தரு ணெறியின் முதலர சியற்றிய துரையே. (௬)

அடியென லெதுவோ முடியென லெதுவோ வருட்சிவ மதற்கெனப் பலகாற், படியுற வருந்தி யிருந்தவென் வருத்தம் பார்த்தருளோலெழுந் தருளி, மிடியற வெனைத்தான் கடைக்கணித் தெனக்குள் விளங்குவ வடிமுடி யென்றாய், வடிவிலாக் கருணை வாரியே மூன்று வயதினி லருள்பெற்ற மணியே. (௭)

செவ்வகை யொருகாற் படுமெதி யளவே செறிபொறி மனமதன் முடிவி, லெவ்வகை நிலையுந் தோற்றுநீ நினக்கு ளெண்ணிய படியெலா மெய்து, மிவ்வகை யொன்றே வருத்தமில் வகையென் றெனக்கருள் புரிந்தசற் குருவே, தெவ்வகை யமண விருளற வெழுந்த தீபமே சம்பந்தத் தேவே. (௮)

முன்புறு நிலையும் பின்புறு நிலையு முன்னினின் றுளமயக் குறுங்கா, லன்புறு நிலையாற் றிருநெறித் தமிழ்கொண் டையநீத் தருளிய வரசே, யென்புபெண் ணுருவோ டின்னுயி ரதுகொண் டெழுந்திடப் புரிந்தல கெல்லா, மின்புறப் புரிந்த மறைத்தனிக் கொழுந்தே யென்னுயிர்க் குயிரெனுங் குருவே. (௯)

வருபகற் கற்பம் பலமுயன் றாலும் வரலருந் திறனெலா மென
க்கே,யொருபகற் பொழுதி லுறவளித் தனைநின் னுறுபெருங் கருணை
யென் னுரைப்பேன், பெருமண நல்லூர்த் திருமணங் காணப் பெற்
றவர் தமையெலா ஞாந வுருவடைந் தோங்கக் கருணைசெய் தளித்த
வுயர்தனிக் கவுணிய மணியே. (க0)

வே று.

சீரார் சண்பைக் கவுணியர்தந்தெய்வ மரபிற் றிகழ்விளக்கே தெ
விட்டா துளத்திற் றித்திக்குந் தேனே யழியாச் செல்வமே, காரார்
மிடற்றுப் பவளமலைக் கண்ணின்முளைத்த கற்பகமே கரும்பேகனி
யே யென்னிரண்டு கண்ணே கண்ணிற் கருமணியே, யேரார்பருவ
மூன்றி லுமை யினிய முலைப்பா லெடுத்தூட்டுமின்பக் குதலை மொழி
ச்குருந்தே யென் னுருயிருக் கொருதுணையே, பேரார் ஞாந சம்பந்தப்
பெருமா னேநின் றிருப்புகழைப் பேசு கின்றோர் மேன்மேலும் பெ
ருஞ்செல் வத்திற் பிறங்குவரோ. (கக)

திருச்சிற்றம்பலம்.

## * ஆளுடையவரசுஅருண்மாலை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுசீ ரதிகையருட் டலத்தி னோங்குஞ் சிவக்கொழுந்தி
னருட்பெருமைத் திறத்தால் வாய்மை,யுருத்தகுமெய் யுணர்ச்சிவடி
வாகிச் சைவ வொளி விளங்க நாவரசென் றொருபேர் பெற்றுப்,
பொருத்தமுற வுழவாரப் படைகைக் கொண்ட புண்ணியனே நண்
ணியசீர்ப் புநித னேயென், கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞாநக்
கடலேநின் கழல்கருதக் கருதுவாயே. (க)

வாய்மையிலாச் சமணுதர் பலகாற் செய்த வஞ்சமெலாந் திரு
வருட்பேர் வலத்தானீந்தித், தூய்மைபெறுஞ் சிவநெறியே விளங்க
வோங்குஞ் சோதிமணி விளக்கேயென் றுணையே யெம்மைச், சேய்
மைவிடா தணிமையிடத் தாள வந்த செல்வமே யெல்லையிலாச் சிற

* திருநாவுக்கரசுசுவாமிகள்.

ப்பு வாய்ந்துள், ளாய்மையுறு பெருந்தகையே யமுதே சைவ வணியேசொல் லரசெனும்பே ரமைந்த தேவே. (உ)

தேவரெலாந் தொழுந்தலைமைத் தேவர் பாதத் திருமலரை முடிக்கணிந்து திகழ்ந்து நின்ற, நாவரசே நான்முகனும் விரும்பு ஞான நாயகனே நல்லவர்க்கு நண்ப னேயெம், பாவமெலா மகற்றியருட் பான்மை நல்கும் பண்புடைய பெருமானே பணிந்து நின்பான், மேவவிருப் புறுமடியர்க் கன்பு செய்ய வேண்டினே னவ்வகைநீ விதித்திடாயே. (ங)

விதிவிலக்கீ தென்றறியும் விளைவொன் றில்லாவினையனே னெனினுமென்னை விரும்பி யென்னுண், மதிவிளக்கை யேற்றியருண் மனையின் ஞான வாழ்வடையச் செயல்வேண்டும் வள்ளலேநற், பதிமலர்த்தா ணிழலடைந்த தவத்தோர்க் கெல்லாம் பதியேசொல் லரசெனும்பேர் படைத்த தேவே, கதிதருகற் பகமேமுக் கனியே ஞானக் கடலேயென் கருத்தேயென் கண்ணு ளானே. (ச)

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக் கனியேநா வரசேசெங் கரும்பே வேதப், பண்ணுளே விளைந்த வருட் பயனே யுண்மைப் பதியோங்கு நிதியேநின் பாத மன்றி, விண்ணுளே யடைகின்ற போக மொன்றும் விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டா, யொண்ணுளே யொன்பதுவாய் வைத்தா யென்ற வுத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே. (ரு)

ஓங்காரத் தனிமொழியின் பயனைச் சற்று மோர்கிலேன் சிறியேனிவ் வுலக வாழ்வி,லாங்காரப் பெருமதமால் யானை போல வகம்பாவ மயனுகி யலைகின் றேனுன்,பாங்காய மெய்யடியர் தம்மைச் சற்றும் பரிந்திலே னருளடையும் பரிசொன் றுண்டோ, தீங்காய செயலனைத்து முடையே னென்ன செய்வேன்சொல் லரசேயென் செய்குவேனே. (சா)

செய்வகையொன் றறியாத சிறியே னிந்தச் சிற்றுலக வாழ்க்கையிடைச் சிக்கி யந்தோ,பொய்வகையே புரிகின்றேன் புண்ணியா நின் பொன்னடியைப் போற்றிலேன் புனித னேநா, னுய்வகையெவ் வகையாது செய்வே னீயே யுறுதுணையென் றிருக்கின்றே னுணர்வி

லேனே, மெய்வகையிற் செலுத்தநினேத் திடுதி யோசொல் வேந்தே யென் னுயிர்த்துணேயாய் விளங்குந் கோவே. (எ)

விளங்குமணி விளக்கெனநால்வேதத் துச்சி மேவியமெய்ப்பொருளேயுள்ளே விரும்பி வைத்துக்,களங்சறுமெய் யன்பமொலாங் களிப்ப வன்றோர் கற்றுணேயாற் கடல்கடந்து கரையிற் போந்த, துளங்குபெறுஞ் சிவநெறியைச் சார்ந்த ஞானத் துணேயேநந் துரையே நற் சுகமே யென்றும், வளங்கெழுமா சமநெறியை வளர்க்க வந்த வள்ளலே நின்னருளே வழங்கு வாயே. (அ)

அருள்வழங்குந் திலதவதி யம்மை யார்பின் னவதரித்த மணியே சொல் லரசே ஞாநத், தெருள்வழங்குஞ் சிவநெறியை விளக்க வந்த செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறியனேனே, யிருள்வழங்கு முலகியனின் றெடுத்து ஞாந வின்னருடந் தாண்டருள்வா யின்றே லந்தோ, மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வே னுய்யும் வகையறியே னின்னருட்கு மரபன் றீதே. (க)

தேர்ந்தவுளத் திடைமிகவுந் தித்தித் தூறுஞ் செழுந்தேனே சொல்லரசாந் தேவே மெய்மை, சார்ந்துதிக ழப்பூதி யடிகட்கின்பந் தந்தபெருந் தகையேயென் தந்தை யேயுட், கூர்ந்தமதி நிறைவேயென்குருவே யெங்கள் குலதெய்வ மேசைவக் கொழுந்தே துன்பந், தீர்ந்தபெருநெறித்துணேயே யொப்பிலாதசெல்வமேயப்பனெனத் திகழ்கின் றோனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## * ஆளுடையநம்பிகளருண்மாலே.

### கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

மதியணிசெஞ் சடைக்கனியை மன் றுணடம் புரிமருந்தைத்
துதியணிசெஞ் சுவைப்பொருளிற் சொன்மாலே தொடுத்தருளி
விதியணிமா மறைநெறியு மெய்ந்நிலேயா சமநெறியும்
வதியணிந்து விளங்கவைத்த வன்றொண்டப் பெருந்தகையே. (க)

---

* சுந்தரமூர்த்திசுவாமிகள்.

நீற்றிவிட்ட நிலையாப்புன் னெறியுடையார் தமைக்கூடிச்
சேற்றிவிட்ட கம்பமெனத் தியங்குற்றேன் றனையாளா
யேற்றிவிட்ட திருவடியை யெண்ணியரும் பொன்னையெலா
மாற்றிவிட்டுக் குளத்தெடுத்த வருட்டலைமைப் பெருந்தகையே. (உ)

இலைக்குளநீ ரழைத்ததனி லிடங்கருற வழைத்ததன்வாய்த்
தலைக்குதலை மதலையுயிர் தழைப்பவழைத் தருளியநின்
கலைக்கும்வட கலையின்முதற் கலைக்குமுறு கணக்குயர்பொன்
மலைக்குமணு நிலைக்குமுரு வன்வெருண்டப் பெருந்தகையே. (ங)

வேதமுதற் கலைகளெலாம் விளைந்துவிளைந் தநந்தமுறை
யோதவவைக் கணுத்துணையு முணர்வரிதா மெம்பெருமான்
பாதமலர் நினதுதிருப் பணிமுடிமேற் படப்புரிந்த
மாதவம்யா துரைத்தருளாய் வன்றொண்டப் பெருந்தகையே. (ச)

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யென்றுமுன்னீ சொன்னபெருஞ் சொற்பொருளை
யாழநினைத் திடிலடியே னருங்கரணங் கரைந்துகரைந்
தாழியிலின் புறுவதுகா ணுயர்கருணைப் பெருந்தகையே. (ரு)

வான்காண விந்திரனு மாலயனு மாதவருந்
தான்காண விறையருளாற் றனித்தவள யானையின்மேற்
கோன்காண வெழுந்தருளிக் குலவியநின் கோலமதை
நான்காணப் பெற்றிலனே நாவலூர்ப் பெருந்தகையே. (சு)

தேன்படிக்கு மமுதாமுன் றிருப்பாட்டைத் தினந்தோறு
நான்படிக்கும் போதென்னை நானறியே னுவொன்றே
யூன்படிக்கு முளம்படிக்கு முயிர்படிக்கு முயிர்க்குயிருந்
தான்படிக்கு மநுபவங்காண் டனிக்கருணைப் பெருந்தகையே. (எ)

இன்பாட்டுத் தொழிற்பொதுவி லியற்றுகின்ற வெம்பெருமா
னுன்பாட்டுக் குவப்புறல்போ லூர்பாட்டுக் குவந்திலனொன்
றென்பாட்டுக் கிசைப்பினுமென் னிடும்பாட்டுக் கரணமெலா
மன்பாட்டுக் கிசைவதுகா ணருட்பாட்டுப் பெருந்தகையே. (அ)

பரம்பரமாந் துரியமெனும் பதத்திருந்த பரம்பொருளை
யுறம்பெறத்தோ ழமைகொண்ட வுன்பெருமை தனைமதித்து

வரம்பெறநற் றெய்வமெலாம் வந்திக்கு மென்றாலென்
றரம்பெறவென் புகல்வேனுன் றனித்தலைமைப் பெருந்தகையே. (கூ)

பேரூரும் பரவைமனப் பிணக்கறவெம் பெருமானை
யூரூரும் பலபுகல வோரிரவிற் றூதனெனத்
தேரூருந் திருவாரூர்த் தெருவுதொறு நடப்பித்தா
யாரூர நின்பெருமை யயன்மாலு மளப்பரிதே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## * ஆளுடையவடிக ளருண்மாலை.

தரவுக்கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

தேசகத்தி லினிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே யாநந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்ததமிழ் மாமறையி
னாசகன்ற வநுபவநா னநுபவிக்க வருளுதியே. (க)

கருவெளிக்குட் புறனாகிக் கரணமெலாங் கடந்துநின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக் கோதறநீ கலந்ததனி
யுருவெளிக்கே மறைபுகழு முயர்வாத வூர்மணியே. (உ)

மன்புருவ நடுமுதலா மனம்புதைத்து நெடுங்கால
மென்புருவாய்த் தவஞ்செய்வா ரொல்லாரு மேமாக்க
வன்புருவம் பெற்றதன்பின் னருளுருவ மடைந்துபின்ன
ரின்புருவ மாயினைநீ யெழில்வாத வூரிறையே. (ங)

உருவண்டப் பெருமறையென் றுலகமெலாம் புகழ்கின்ற
திருவண்டப் பகுதியெனுந் திருவகவல் வாய்மலர்ந்த
குருவென்றெப் பெருந்தவருங் கூறுகின்ற கோவேநீ
யிருவென்றத் தனியகவ லெண்ணமெனக் கியம்புதியே. (ச)

---

* மாணிக்கவாசகசுவாமிகள்.

தேடுகின்ற வானந்தச் சிற்சபையிற் சின்மயமா
யாடுகின்ற சேவடிக்கீ ழாடுகின்ற வாரமுதே
நாடுகின்ற வாதவூர் நாயகனே நாயடியேன்
வாடுகின்ற வாட்டமெலாம் வந்தொருக்கான் மாற்றுதியே. (௫)

சேமமிகுந் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே நீயுரைத்த வாசகத்தை யெண்ணுதொறுங்
காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
வேமமுறு கற்புடையா ளின்பினுமின் பெய்துவதே. (௬)

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கா னற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
னூன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே. (௭)

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தி [த்துத்
லொருமொழியே யென்னையுமென் னுடையனையு மொன்றுவி
தருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே. (௮)

பெண்சுமந்த பாகப் பெருமா னொருமாமே
லெண்சுமந்த சேவகன்போ லெய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதுமோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டதுநின் பொருட்டன்றோ புண்ணியனே.

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு நானடைதல் வியப்பன்றே. (க0)

திருச்சிற்றம்பலம்.

---

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

# * சற்குருசரணாரவிந்தஸ்துதி.

இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

சற்குரு சரணா விந்தம் - அது
தனைப்பெறு வோர்க்குறுஞ் சச்சிதா னந்தம்
சற்குரு சரணா விந்தம்.

சரணங்கள்.

க. சிற்பர போதத்தை நாட்டும்-சுத்த-சித்தாந்த வேதாந்த
சமரசஞ் சூட்டும்-தற்பர விஸ்வத்தைக் காட்டுந் - தன்
னுட் - சத்திய ஞானசிற் சத்தியைக் கூட்டும் ... (சற்குரு)

உ. ஆறந்த உண்மையுந் தேறும்-அதற் - கப்பாலைக் கப்பா
லைக் கப்பாலும் மீறும் - பேறிந்த வனமெனும் வீறும்-
மாயப் - பிறப்பிறப் பறுக்கவோர் பெருமொழி கூறும் (சற்குரு)

ங. முப்பொரு ளுண்மையைத் தேற்றும்-அந்த-முப்பொரு
ளொன்றின்வே றின்மையுஞ் சாற்றும் - எப்பொருள்
நிலைகளுந் தோற்றும் - ஞான - வியல்கொள்பூ ரண
நிலை எனமறை போற்றும் ... ... ... (சற்குரு)

ச. சாதுக்கள் சங்கத்தைச் சேர்க்கும்-அவர்-சத்விசா ரந்
தனிற் றத்துவங்கோர்க்கும்-மாதுக்கம்போம்வழி பூர்க்
கும்-என்றும்-மறவாத நினையாத மகிமையைக் கூர்க்கும்(சற்குரு)

ரு. சுத்தமோ னாதீதம் மன்னும்-உண்மைச் சுகசம ரசநிலைச்
சுபகரந் துன்னுஞ் - சித்தமெய்ஞ் ஞானமே பன்னும்-
ஸ்ரீமாந் - திருவருட் பிரகாச வள்ளலா ரென்னும். (சற்குரு)

திருவருட்பெருமான் திருவடிவாழ்க.

---

* இஃது, திருவருட்பிரகாசவள்ளலாரைச் சதா சிந்திக்கும் உத்தர ஞானசிதம்பரசபையு ளொருவரா லியற்றியது.

# * மெய்ம்மொழிப்பொருள்விளக்கம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

எல்லாவுலகத்தவரும் இத்தன்மையினனென்றறிந்து சொல்லுதற் கரியவரும், சந்திரனுலாவுகின்ற கங்கைதங்கிய சடையினையுடைய வரும், அளவில்லாத சோதிசொரூபமானவரும், திருச்சிற்றம்பலத் தில் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளுகின்றவருமாகிய ஸ்ரீநடராஜ வள்ளலாரது தாமரைமலர்போன்ற சிலம்பணிந்தபாதங்களை (யாம்) துதித்து வணங்குகின்றோம்.

இந்தச்செய்யுளில், "உலகெலாம்" என்பது ஸ்ரீநடராஜவள் ளல் அசரீரியாகவருளிச்செய்தது. ஒழிபபகுதி ஸ்ரீசேக்கிழார்சுவா மிகள் திருவாய்மலர்ந்தருளியது. சிவனார் முதலெடுத்துக்கொடுத்த தைச் சேக்கிழார் பூர்த்திசெய்தமையால், இருவர்வாக்கையும் ஒரே வாக்காகத்தெளிதலே யமைவுடைத்து.

இதில் பரனது எண்குணங்களுங்கேட்கப்படுகின்றன. அவை: பரன் அசித்துஞ் சித்துமாகிய உலகுயிர்களுக்கறிவரியனாய் நின்று தானே அவைகளுக்குத் தொழிலறிவுகளை இயக்கலால் தன்வயத்த னாதலும், தனது திருமேனியின் பரிசத்தால் சந்திரனுக்குச்சாபநிவர் த்தியும், கங்கைக்குப்பரிசுத்தத்வமும் பிராப்தமாயினமையால் தூய உடம்பினனாதலும், சோதிமாத்திரமாயிராமல் அலகில்சோதியனா யிருத்தலால் இயற்கையுணர்வினனாதலும், முற்றுமுணர்வினனாத லும், இயல்பாகவே பாசங்களினீங்குதலும், சாபமெய்திய சந்திர னிடத்திலும் பகீரதனிடத்திலும்,பெத்தாத்மாக்களிடத்திலு மிரங்கி னமையால் பேரருளுடைமையும், ஒருவருந் தன்னை யடையாவாறு அதீதப்பட்டும், அக்கியசாத்தியமாகாத கங்கையைத்தரித்தும் விள ங்கலால் முடிவிலாற்றலுடைமையும், அம்பலத்தின்கண் ஆனந்தத் தாண்டவம் புரிதலால், வரம்பிலின்பமுடைமையும் பெற்றாம்.

---

* இத்தலைப்பெயரிட்டுச் சிதம்பரம் - இராமலிங்கசுவாமிகள் விளக்கியுள்ளவுரை மிகவிரிதலால், அதனை ஈண்டுப் பதிப்பித்திலம்.

# சீவகாருணியச் சுருக்கம்.

உலகத்தில் மனிதப்பிறப்பெய்தியவர்கள் இப்பிறப்பினாலடையத்தக்க ஆன்மலாபத்தைக் காலமுள்ளபோதேயறிந்து அடையவேண்டும். ஆன்மலாபமாவது, எல்லாவண்டசராசரங்களையும் எல்லாச்சீவர்களையும் தமது அருட்சத்தியால் தோன்றி விளங்க விளக்கஞ் செய்விக்கின்ற இயற்கையுண்மை வடிவினராகிய கடவுளின் பூரணவியற்கையின்பத்தைப்பெற்று எக்காலத்தும் தடைபடாமல் வாழ்கின்ற ஒப்பற்ற பெரிய வாழ்வே ஆன்மலாபமாம். இத்தகைய அரியவாழ்வை அடையவேண்டில் கடவுளருள்வேண்டும். அவ்வருள் சீவகாருணியவொழுக்கத்தால் எய்துமன்றி வேறெதனாலும் எய்தமாட்டா. அருளென்பது-கடவுள் தயவு, கடவுளியற்கைவிளக்கம். சீவகாருணியமென்பது - சீவர்கள்தயவு, சீவர்களான்மவியற்கை. இதனால் தயவைக்கொண்டு தயவைப்பெறுதலும், விளக்கத்தைக்கொண்டு விளக்கத்தைப்பெறுதலும்கூடும்; வேறொன்றினால் பெறக்கூடாமை யநுபவமாகலின், சீவகாருணியத்தைக்கொண்டே அருளைப்பெறவேண்டும். அன்றி, அன்பு வேறு ஈசுவரன் வேறாகவில்லாமல் அன்பே ஈசுவரனுதலை "அன்புஞ்சிவமுமிரண்டென்பரறிவிலார் - அன்பேசிவமென்றாருமறிந்திலார்-அன்பேசிவமாயாருமறிந்தபின்-அன்பேசிவமாயமர்ந்திருப்பாரே" என்னும் திருமந்திரத்தில் கூறிய வேதவாக்கியப்படி, ஒவ்வொரு சீவர்களுக்கும்சீவகாருணியம் வந்தெய்தியபின்னரோ கடவுளருளுக்குப் பாத்திரராவரொன்பது சத்தியம். சீவகாருணியமாவது—சீவர்கள்பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பய முதலியவைகளால் துக்கத்தை யநுபவிக்கக்கண்டபோதாயினும், கேட்டபோதாயினும் உடனே அத்துன்பம் அச்சீவனுக்கு நேராவண்ணம் தன்னாற் கூடிய முயற்சிசெய்து போக்குதலாம். "தன்னூன்பெருக்கற்குத்தான்பிறிதூனுண்பா-னெங்ஙனமாளுமருள்" என்பதுபோல், பயனில்லாத தன்னூன்வளர்த்தலைப் பயனெனநினைத்துப் பல உயிர்களைக்கொன்றுதின்று வுயிர்வாழ்பவர் தெய்வவருளெய்தப்பெறாராய் நெடுங்காலம் நரகவேதனையுளுழல்வரொன்பது சத்தியம். சத்தியம்.

மருவாணைப்பெண்ணாக்கியொருகணத்திற்கண்விழித்துவயங்கும்பெ
ணுருவாணையுருவாக்கியிறந்தவரையெழுப்புகின்றவுறுவனேனுங்
கருவாணையுறவிரங்காதுயிருடம்பைக்கடிந்துண்ணுங்கருத்தனேலெங்
குருவாணையெமதுசிவக்கொழுந்தாணைஞானியெனக்கூறொணாதே.

---

உ
சிவமயம்.

# நித்தியவொழுக்கச்சுருக்கம்.

சூரியோதயத்திற்கு முன் நித்திரைவிட்டெழுந்து விபூதிதரித்துக் கடவுளைத் தியானஞ்செய்தலும், பின் மலசலவுபாதைகளைக் கழித்தலும், வேலங்குச்சியால் பல்துலக்கி வெந்நீரால் தேகசுத்தி செய்தலும், விபூதிதரித்துச்சிவசிந்தையோடு சிறிதுநேரமிருத்தலும், பசுவின்பாலையும் புளித்ததயிரையும் பருகுதலுமன்றி, நீரைக்காய்ச்சியும் மோரைப்பெருக்கியும் நெய்யையுருக்கியும் உண்ணுதலும், உணவுண்டபின் சிறிதுநேரம் உலாவலும், எந்த உணவிலும் புலாலுண்ணாதிருத்தலும், கிழங்குவகையில்-கருணையும், பழத்தில்-பேயன்வாழையும், ரஸ்தாளியும் சிறிதுண்ணலும், பின்னர் பஞ்சவாசத்தோடு தாம்பூலந்தரித்து முன் ஊறிய ஜலத்தை உமிழ்தலும், இடதுகை கீழ்வைத்துப்படுத்தலும், மாதத்திற்கிருமுறை மாதரைச்சேர்தலும், வாரத்திற்கிருமுறை ஸ்நானஞ்செய்தலும், மாதம் நான்குமுறை சௌளஞ்செய்துக்கொள்ளுதலும், மூன்றுநாட்கொருமுறை கண்களுக்கு மைதீட்டுதலும், நான்குமாதத்திற்கொருமுறை வமனமும், ஆறுமாதத்திற்கொருமுறை விரேசனமுமாகும்படி அவுடதங்கொள்ளுதலும், போஜனம் நித்திரை மலஜலம் மாதர்போகம் அழுக்காடை சீப்பிட்டுச் சீவும்போது சிந்துகின்ற தலைமயிர் ஆகிய இவைகளை மாலைக்காலத்தில் ஒழித்தலும், கன்றோடுகூடிய பசுவையும், கடவுளையும், பிதிர்க்களையும், ஆசிரியனையும், அம்மாலைக்காலத்தில் பூசித்தொழுகுதலும் ஆகிய விதிகளை தேகதத்துவமுணர்ந்த விவேகிகளே மேற்கொண்டொழுகத்தக்கனவாம். மேலைவிதிப்படி நாம் ஒழுகுவோமானால், வாழ்நாளினிடையில் வியாதிகளின்வயப்பட்டுவரும் நமனார்க்கு இரையாகாது தீர்க்காயுளையுடையராய்வாழ, எப்போதும் கடவுளிடத்தில் உண்மையாகிய அன்பையும் ஜீவர்களிடத்தில் கருணையும் வைத்து ஒங்காரபஞ்சாக்ஷரஜபம் செய்துவரல்வேண்டும்.—சுபம்.

